ஸ்ரீ ராமஜெயம்

# தோத்திரமாலை

(ஸ்ரீமத் கம்பராமாயணச் சுருக்கத்துடன்)





கோவை ஸ்ரீராம கதாரத்னம்,
கம்பர் கவிமுழக்கம், கம்பன் வல்லான்,
கம்பன் கவிச்சந்த மேகம், கம்பன் கதிரொளி
கம்பன் கவிச்செல்வன், கம்பன் அபிநவ காளமேகம்
கம்பராமாயண ஜோதி, முத்தமிழ் வித்தகர்
**V. தியாகராஜனால்**

பிரசுரிக்கப்பட்டது.

1958

[ விலை 0—6—0 ]

# சமர்ப்பணம்

[ஒரு சமயம் ஒரு பக்தன் திருப்பதியில் திருவேங்கடமுடையானுக்குத் தேர் செய்வதற்காகச் சந்தனக் கட்டையெடுத்துச் செய்யுங்கால் இரண்டு கட்டைகள் மிஞ்சின. அவற்றில் நான் வசிட்பேன். என்னை ஓரிடத்தில் தென்னுட்டில் பிரதிஷ்டை செய்க என்று திருவேங்கடமுடையான் உத்தரவிட அவைகள் தென்னுட்டில் திருநெல்வேலி ஜில்லாவில் கருங்குளம் என்னும் கிராமத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டு அவ்விடத்தில் ஸ்ரீ ஸ்ரீனிவாசமூர்த்தி வரப்பிரசாதியாய் விளங்குகின்ருர். ஸ்ரீ ராம நாமப் பரதேசி அவ்விடம் சென்று அபிஷேக காலத்தில் இருந்த சந்தனக் கட்டைகள் ஸ்ரீனிவாசமூர்த்தியாக விளங்கியது கண்டு களித்து அக்களிப்பின் விளைவாக இச்சிறு நூலை கருங்குளம் ஸ்ரீ ஸ்ரீனிவாசமூர்த்திக்கு சமர்ப்பணம் செய்கிருன்.]

## பாடல்கள்

நிட்டையே செய்குவோர்க்கு நிமலநீ தோன்றுவாயிக்
கட்டையில் தோன்றுவாயோ எனக்கருத் தழிந்துநின்றேன்; என்
கட்டையே உருகிக்கண்ணீர் கலகல வென்றுவாரச்
சட்டெனத் தோன்றினுயே சந்தனக் கட்டைதன்னில்.

தன்னையே மறந்துவிட்டேன் தயாபர நாதஉந்தன்
தன்னையே எண்ணிஎண்ணி ஏங்குமித் தமியனேற்கு
உன்னையே யன்றிவேறு கதியொன்று உண்டோ? உந்தன்
நன்னெடும் பாதம்தந்து நாதனே காப்பாய்என்னை.

வித்தகப் பெரியோயுந்தன் விமலமாம் கழல்பணிந்து
நித்தமும் பூஜைசெய்து நேமமு டன்விளங்கும்
உத்தம ரிருக்களந்தன் உள்ளமே உருகித் தந்த
புத்தகம் தன்னையேற்று அருள்வாயே புவனநாத.

— ஸ்ரீ ராம நாமப் பரதேசி

உ

ஸ்ரீராமஜெயம்

# முன்னுரை

முழ்மைசா லுலதக்கெல்லாம் மூலமந்திரமான ஸ்ரீராம மந்திரத்தை ஜெபிப்போருக்கும் அப்பெரியோனின் கதையைப் படிப்போருக்கும் நாடிய பொருள் கைகூடும் என்றனர் நல்லோர். வாழ்க்கையில் பரதேசியானவருக்கும் ஸ்ரீராம நாமம் மனச்சாந்தியளித்து, மனவெறுப்பைப் போக்குகின்றது என்பது அடியேன் கண்ட அனுபவம். ஸ்ரீராம சரிதையைப் பிரசங்கம் செய்யாத நாள் பிறவா நாள் என்ற எண்ணம் உண்டாகி அடியேன் இதுவரை 127 தடவைகள் ஸ்ரீமத் கம்ப ராமாயணத்தை பலவேறு இடங்களில் பிரசங்கம் செய்யும்பேறு பெற்றேன். இது, ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளுடையவும், ஸ்ரீ சிருங்கேரி பீடாதிபதிகளுடையவும், ரிஷிகேசம் ஸ்ரீ சிவானந்த முனிவர் பிரானுடையவும் இன்னும் பல பெரியோர்களின் ஆசியால் கிடைத்த பெரும்பேறு. எனது பிரசங்கங்களில் பாடப்பெறும் பல்வேறு துதிகளை அன்பர்கள் யாவரும் மனப்பாடம் செய்ய விருப்பம் கொண்டமையால் அடியேன் இதை ஒரு சிறு நூல் வடிவாக வெளியிடுகிறேன். குற்றங்களைந்து குணங்கொண்டு அன்பர்கள் எனக்கு என்றும் ஆதரவளித்து மேன்மேலும் தெய்வப் பணியில் ஊக்கமளிக்க வேண்டுகின்றேன்.

இதை விரைவில் அச்சடித்து அளித்த புதுக்கோட்டை "மதராஸ் ரிப்பன் பிரஸ்"காரர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

7063, Trichy Road
TIRUGOKARNAM
PUDUKKOTTAI
TEL: RAMAKATHA

V. தியாகராஜன்
முகாம்: புதுக்கோட்டை 1–2–58

உ

ஸ்ரீராமஜெயம்



# தோத்திர மாலை

## ஜெய சித்தி விநாயக மூர்த்திக்கு ஜே!

கல்லா நிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே !

ஜயகணேச ஜயகணேச ஜயகணேச - பாஹிமாம்
ஸ்ரீகணேச ஸ்ரீகணேச ஸ்ரீகணேச - ரக்ஷமாம்
ஜயசரஸ்வதி ஜயசரஸ்வதி ஜயசரஸ்வதி - பாஹிமாம்
ஸ்ரீசரஸ்வதி ஸ்ரீசரஸ்வதி ஸ்ரீசரஸ்வதி - ரக்ஷமாம்
சரவணபவ சரவணபவ சரவணபவ - பாஹிமாம்
கார்த்திகேய கார்த்திகேய கார்த்திகேய - ரக்ஷமாம்
கங்காராணி கங்காராணி கங்காராணி - பாஹிமாம்
பாகிரதி பாகிரதி பாகிரதி - ரக்ஷமாம்
ராஜராஜேஸ்வரி ராஜராஜேஸ்வரி ராஜராஜேஸ்வரி - பாஹிமாம்
திரிபுரசுந்தரி திரிபுரசுந்தரி திரிபுரசுந்தரி - ரக்ஷமாம்
ஹரேராம ஹரேராம ராமராம ஹரேஹரே
ஹரேகிருஷ்ண ஹரேகிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண ஹரேஹரே
தத்தாத்ரேய தத்தாத்ரேய தத்தாத்ரேய - பாஹிமாம்
தத்தகுரு தத்தகுரு தத்தகுரு - ரக்ஷமாம்
ஆஞ்சநேய ஆஞ்சநேய ஆஞ்சநேய - பாஹிமாம்
ஹனுமந்த ஹனுமந்த ஹனுமந்த - ரக்ஷமாம்
ஓம் தத்ஸத் ஓம் தத்ஸத் ஓம் தத்ஸத் - ஓம்
ஓம் சாந்தி ஓம் சாந்தி ஓம் சாந்தி - ஓம்



## முருகன் துதி

ஆடும் பரிவேல் அணி சேவலெனப்
பாடும் பணியே பணியா யருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவில்
சாடும் தனி யானை சகோதரனே ! 1

உல்லாச நிராகுல யோகவிதச்
சல்லாப விநோதனு நீயலையோ
எல்லாமற என்னை இழந்தநலம்
சொல்லாய் முருகா சுரபூபதியே ! 2

திணியான மனோசிலை மீதுனதாள்
அணியா ரரவிந்த மரும்புவதோ
பணியாவென வள்ளி பதம்பணியும்
தணியா வதிமோக தயாபரனே ! 3

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே. 4

—கந்தரனுபூதி

அருந்தமிழ் அணங்காம் அமிழ்தினு மினியாள்
பெருந்தவ உருவாம் பெரும்பெயர் முருகா
அருந்தவத்தோர்கள் அடியிணை வணங்கவே
பொருந்துமோ பேதை பணிந்துனை யேத்தல்

ஆறினில் அனலாய்த் தோன்றிய அழகா !
ஆறினைத் தலையில் தரித்தவன் மகனே !
ஆறிரு கரத்தோய் ஆறுமுகத்தோய்
ஆறுதலளிப்பாய் ஹர ஹர முருகா.

மறுமதி மழுவாயுதமே உடையோன்
சிறுவா தருவாய் சிறியேர்க் கிருவரம்
இறவாவரமும் இறந்தால் மீண்டும்
பிறவாவரமும் பெருமாத ருவாய். (ஸ்ரீராமநாமப் பரதேசி)

## திருப்புகழ்

சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்குஞ்
செகுத்தவ ருயிர்க்குஞ் சினமாகச்
சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும்
திருப்புகழ் நெருப்பென் றறிவோம்யாம்
நினைத்தது மளிக்கும் மனத்தையு முருக்கும்
நிசிக்கரு வறுக்கும் பிறவாமல்
நெருப்பையு மெரிக்கும் பொருப்பையு மிடிக்கும்
நிறைப்புக முரைக்குஞ் செயல்தாராய்
தனத்தன தனத்தன திமித்திமி திமித்திமி
தகுத்தகு தகுத்தகு தனபேரி
தடுட்டுடுட் டுடுட்டெண் டெனத்துடி முழங்குந்
தளத்துட னடக்குங் கொடுசூரர்
சினத்தையு முடற்சங் கரித்தமலை முற்றுஞ்
சிரித்தெரி கொளுத்துங் கதிர்வேலா
தினைக்கிரி குறப்பெண் தனத்தினில் சுகித்தெண்
திருத்தணி யிருக்கும் பெருமாளே

—அருணகிரிநாதர்

## முருகா! முருகா!! முருகா!!!

முருகா முருகா முருகா

1. வருவாய் மயில் மீதினிலே
வடிவேலுடனே வருவாய்!
தருவாய் நலமும் தகவும் புகழும்
தவமும் திறமும் தனமும் கனமும்! (முருகா)

2. அடியார் பலர் இங்குளரே!
அவரை விடுவித் தருள்வாய்!
முடியா மறையின் முடிவே! அசுரர்
முடிவே கருதும் வடிவேலவனே! (முருகா)

3. சுருதிப் பொருளே வருக!
துணிவே கனலே வருக!
கருதிக் கருதிக் கவலைப்படுவார்
கவலைக் கடலைக் கடியும் வடிவேல் (முருகா)

4. அமரா பதி வாழ்வுறவே
அருள்வாய் சரணம் சரணம்
குமரா பிணியாவையுமே சிதற
குமுறும் சுடர் வேலவனே சரணம் (முருகா)

5. அறிவாகிய கோயிலிலே
அருளாகியதாய் மடிமேல்
பொறிவேலுடனே வளர்வாய் அடியார்
புதுவாழ்வுறவே புவி மீதருள்வாய் (முருகா)

6. குருவே பரமன் மகனே
குகையில் வளரும் கனலே
தருவாய் தொழிலும் பயனும் அமரர்
சமராதிபனே சரணம் சரணம் (முருகா)

ஜெயவல்லி தேவசேனு காந்த ஸ்மரணம்
ஜெயஜெய சுப்ரமண்யம்.

## குருவணக்கம்

தருகை நீண்ட தயரதன் ருன்றரும்
இருகை வேழத் திராகவன் றன்கதைக்
திருகை வேலைத் தரைமிசைத் செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பதே. (கம்பர்)

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற்
கற்ற கேள்வி
வல்லார்க ளுல்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய்
மறைக்கப் பாலாய்
எல்லாமா யல்லதுமா யிருந்தபடி யிருந்ததனை
யிருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல் நினைந்துபவத்
தொடக்கை வெல்வாம் —பரஞ்சோதி

## (ஆனந்தராஜா)

ஆனந்த ராஜா சிவானந்த ராஜா
ஆனந்த குடீர் வாசா ஆனந்த ராஜா
போத குருவே எமதாதி குருவே
வேத உருவே விமலநாதனே (ஆன)

அந்தோ உலகினிலே ஆனந்தமே யற்றிருந்தோம்
இந்தோ ஆனந்தமென்று இன்றெமையே காக்க வந்த (ஆன)

இல்லறத்தே இருந்தாலும் இறைவனருள் கிட்டிவிடும்
நல்லறத்தே வழுவாது நடந்து விடு எனக்கூறும் (ஆன)

சொல்லறத்தே வழுவாது இருந்திட்டால் சுகமடைவாய்
இல்லறத்தே ராம ராம எனக்கூற எமக்கருளும் (ஆன)

ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே
எனக்கூறும் இறைவனுடைய மாமந்திரம் இதனை நாமும்
தினங்கூறி தினமும் வாழத் திறமுடைய வழி காட்டும் (ஆன)

—பாடியவர் ஸ்ரீராமநாமப் பரதேசி

ஜெயசத்குருஸ்வாமிகி—ஜே!



## நாமகள் துதி

புத்தகம் படிக மாலை குண்டிகை பொருள்சேர் ஞான
வித்தகந் தரித்த செங்கை விமலையை யமலை தன்னை
மொய்த்தகொந் தளக பார முகின்முலைத் தவள மேனி
மைத்தகு கருங்கட் செவ்வா யணங்கினை வணங்கல் செய்வாம்.

— கம்பர்.



## அனுமன் துதி

அஞ்சிலே ஒன்று பெற்றான் அஞ்சிலே யொன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்றா றாக ஆருயிர் காக்க ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக்கண் டயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான் அவனெம்மை யளித்துக் காப்பான்

—கம்பர்.

## இறை வணக்கம்

உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே —கம்பர்.

[திருவரங்கம் பெரிய கோயிலிலே கவி சக்ரவர்த்தி கம்பன் தன்னுடைய கம்ப ராமாயணத்தை அரங்கேற்றினன். அதே இடத்தில் ஸ்ரீராம நாமப் பரதேசி தனது 86வது ஸ்ரீராம பட்டாபிஷேகத்தை நடத்தும் பாக்கியம் கிட்டியபோது ஸ்ரீரங்கநாதனை மகிழ்ச்சியோடு தொழுது பாடியது]

அரங்கா வா வா வா
எமது ஐயா வா வா வா
இரங்கா திருந்தால் இனிக்கணந்
தரியோம் இறைவா வாவா வா தேவா —அரங்கா
அரக்கர் குலத்தை யடியோ டழிக்க
அடிக்கடி வந்தாயே—தேவா
இரக்க முற்றெமைக் காப்பதற் கின்று
எழுந்துமே வாராயோ—தேவா —அரங்கா
சொன்ன வண்ணம் செய்த பிரான் எனும்
சோதிஸ்வரூபன் நீயே—தேவா
என்ன குற்றங்கள் செய்திருந்தாலும்
இறைவா எம்மைக் காப்பாய்—தேவா —அரங்கா



## சிவபெருமான் வணக்கம்

உலகெலாம் உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்திவணங்குவாம் —சேக்கிழார்

சாம கான விநோத சதாசிவன்
மாம ணுகவந் தருள்புரி மாதவன்
ஏம ளுதனை ஏமாற்றும் எங்குல
சோம சுந்தர சோதி அருள்கவே —ராமநாமப் பரதேசி

| | | | |
|---|---|---|---|
| களியா | னேயின்ஈர் | உரியாய்! | சிவதா! |
| எளியார் | வலியாம் | இறைவா! | சிவதா! |
| அளியார் | அடியார் | அறிவே! | சிவதா! |
| தெளிவார் | அமுதே! | சிவதா! | சிவதா! |
| ஆறும் | மதியும் | அணியுஞ் | சடைமேல் |
| ஏறும் | மலரைக் | கரிசிந் | துவதே? |
| வேறுள் | நினைவார் | புரம்வெந் | தவியச் |
| சீறுஞ் | சிலையாய்! | சிவதா! | சிவதா! |
| தஞ்சே | சரணம் | புகுதுந் | தமியோர் |
| நெஞ்சேய் | துயரங் | கெடநேர் | தொடரும் |
| மஞ்சே | எனவீழ் | மறலிக் | கிறைநீள் |
| செஞ்சே | வடியாய்! | சிவதா! | சிவதா! - சேக்கிழார் |

நம: பார்வதி பதயே—ஹரஹர மகாதேவ



## ஸ்ரீ ராமர் துதி

### நாமாவளிகள்

| | | |
|---|---|---|
| 1. பாவன ராமா | பதித | பாவன ராமா |
| ஜீவன ராமா | சகல | ஜீவன ராமா |
| நாயக ராமா | சீதா | நாயக ராமா |
| மர்த்தன ராமா | வாலி | மர்த்தன ராமா |
| நந்தன ராமா | தசரத | நந்தன ராமா |
| லோசன ராமா | பாப | விமோசன ராமா |
| மோகன ராமா | ஜகன் | மோகன ராமா |
| ஜீவன ராமா | சுஜன | ஜீவன ராமா |

2. ஸ்ரீராம் ஜெயராம் ஜெயஜெயராம்
3. ராமஜெயம் — ஹரி — ராமஜெயம்
4. ஹரேராம ஹரேராம ராமராம ஹரேஹரே
ஹரேகிருஷ்ண ஹரேகிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண ஹரேஹரே
(ஜெய ஜானகீ ஜீவனஸ்மரணம் — ஜெயஜெய ராமராம)

# ஸ்ரீராமர் தோத்திரம்

பூதலத்தை யோரடி யளந்தரூப மானபொற்
பாததாம ரைச்சரண் பணிந்து பூஜை செய்குவோம்
மாதவா கோவிந்தாஹரி கேசவா நாராயணு
நாதகீத வேதமந்த்ர ராமராம ராமனே 1

சூகரத்தின் வடிவெடுத்த சுந்தரா சவுந்திரா
ஏகலோக நாயகாநீ யெங்குமாய் நிறைந்தவா
மேகமா யளாவிநின்ற வேதஞான தேசிகா
நாகமீதில் மேவுகின்ற ராமராம ராமனே 2

காரணு தாமோதரா கரியநீல வண்ணனே
பூரணு பயோதரா புராதனு நிராதனு
வாரணுதி மூலமென்ற போதுவந்த வாமனு
நாரணு அசோதைபுத்ர ராமராம ராமனே 3

வீரசிம்ம உக்ரமுற்ற விஜயமீது தசரதன்
பாரில்மைந்த னுகவந்த பஞ்சவர் சகாயனே
பூரணு கிருபாகரா புதியதூணில் வந்துமுன்
நாரசிம்ம ரூபமான ராமராம ராமனே 4

மாமனுன கஞ்சனை வளைந்துகொண்டு வென்றவா
பூமியுண் டுமிழ்ந்தவா புகழ்ந்தபொன் னரங்கனே
வாமன சொரூபனுன வாசுதேவ தேவனே
நாமமாயி ரம்படைத்த ராமராம ராமனே 5

கோடிசூரி யப்ரகாச கொண்டல்மேக வண்ணனே
வாடிநொந் திடைந்திடாமல் வந்தருள் புரிந்தருள்
தேடியந்த கன்வெகுண்டு சீறிமேவி லுன்னிடம்
நாடிவந்த போதுகாரும் ராமராம ராமனே 6

பாவியென்றீ பேர்கொடாதே பஞ்சபாத கங்களை
மேவிநூறு குற்றமேசெய் தாலும்வந்தென் மெய்யினில்
காவலாக நீயிருந்து கருணைகொண்டு காரையா
நாவினுல் நிதந்துதிப்பன் ராமராம ராமனே 7

தந்திதான்முன் னுலமென்ற போதுவந் ததீதமாய்
வந்துகாந்த தன்றுபோல வந்துகாப்ப தெந்தநாள்
செந்திரு மணுளனுன ஸ்ரீநிவாச நாதனே
நந்திகேச ரன்றரித்த ராமராம ராமனே 8

மச்சரூப ராகவா வராகரூப ராகவா
கொச்சைஆய ருக்குகந்து குன்றெடுத்து நின்றவா
பச்சைஆலி னிற்றுயின்ற பச்சைநீல வண்ணனே
ரட்சகஸ்ரீ ராகவாஸ்ரீ ராமராம ராமனே 9

தானஞ்செய்து மறிகிலேன் தவங்கள்செய்து மறிகிலேன்
ஆனவன்ப ரானபேர்கட் கன்னமிட்டு மறிகிலேன்
தேனமர் துழரய்கொடுன்னைச் சிந்தைசெய்து மறிகிலேன்
நானறிந்த தொன்றுமில்லை ராமராம ராமனே 10

கந்தமர் துழாயணிந்த கருடகேச வாகனு
சொந்தடிமை யிவனுமென்று சூட்சபாதம் நல்கியே
யிந்தவேளை வந்துரட்சி யேகலோக நாயகா
நந்தகேச வாமுகுந்த ராமராம ராமனே 11

இல்லறத்தின் மாய்கையாலே யேங்கினேன் மயங்கியே
புல்லறிவு கொண்டுயானும் போற்றியான் பணிந்திலேன்
அல்லலுற்ற காயமென் றறிந்துவந்து என்னுளே
நல்லறிவு தந்துரட்சி ராமராம ராமனே 12

சங்குசக்க ரந்தரித்த சாரும்ஸ்ரீநி வாசகா
எங்குமாய் நிறைந்தவா இலங்குமுந்நூல் மார்பனே
மங்குல்மேனி யாயுர்ந்த மகரகுண்ட லாதிபா
ரங்கநாய காமுகுந்த ராமராம ராமனே 13

அம்புவேல் விழிமின்னார்கள் ஆசைதன் வலைக்குளே
இன்பசாக ரத்தழுந்தி எண்ணமற்ற வஞ்சகன்
வம்புகோடி செய்திடினும் மாயனே பொறுத்தருள்
நம்பினேனு னுன்னடிமை ராமராம ராமனே 14

ஆழிமீதி னிற்றுயின்ற அச்சுதாமுன் னுதியில்
ஏழுமா மராமரத்தை யெய்துராவ ணுதிகள்
மாளவே சரந்தொடுத்த மாயனே மகிழ்ந்துஎந்
நாளும்நீ யுகந்துகாரும் ராமராம ராமனே 15

குற்றமென்ப தெதுசெய்தாலுங் கொலைகள் செய்திருக்கினும்
பெற்றதாய் விரோதமுண்டோ பிள்ளையென்று கொஞ்சுவாள்
அற்றதன்மை யாவனோ யான்குறைசெய் தாலுமென்
நற்றமிழ்க் குகந்துகாரும் ராமராம ராமனே 16

களபவாச னைமிகுந்த கரியமேக வண்ணனே
துளபமாலை மார்புனைந்த சுருதிவேத நாயகா
உளமகிழ்ந்து கருணைகொண்டு உன்னடிமை யென்றுதான்
நளினபாதம் தந்துகாரும் ராமராம ராமனே 17

சிகரகோபு ரஞ்சிறந்த செய்யவீதி சூழவே
மகரதோர ணஞ்சிறப்ப வரிசைமண்ட பங்களும்
பகரமுற்ற கொடிகளும் பணிந்துதா னயோத்தியில்
நகரவாச மாயிருந்த ராமராம ராமனே 18

வாசமாலி கைபுனைந்து மண்ணையுண்ட வண்ணனே
கேசவா முராரிநந்த கிருஷ்ணனே மனோகரா
தாசனென்று பாததாம ரைச்சரண் கொடுத்தருள்
ராசவெங்க டேசனான ராமராம ராமனே 19

கோலினிற் றுயின்றவா குருந்திலேறி நின்றவா
காலிகன்று மேய்த்தவாமுன் கம்சனை வதைத்தவா
சாலநான் முகனையுந்தி தன்னிலே படைத்தவா
நாலுவேத மும்புகழ்ந்த ராமராம ராமனே 20

தஞ்சமாவ தேதுன்பாத தாமரைச் சரணமே
மிஞ்சவேறு போக்குமில்லை மேகநீல வண்ணனே
அஞ்சலஞ்ச லென்றுகை யமர்த்தியாத ரிப்பையே
ரஞ்சிதப்ர காசனான ராமராம ராமனே 21

எண்ணியன்ப ரானபே ரிடத்திருந் துலாவியே
புண்யநாம தேசிகா புவனரக்ஷ கர்த்தனே
வண்ணனேலீ லாவிநோத வாசனேநின் மலரடி
நண்ணினேன்வை குந்தமேவும் ராமராம ராமனே 22

விருந்துசெய்ய வேணுமென்ற விதுரன்மனையி லேகியே
இருந்துமாயை யாகவில் லிரண்டுதுண்ட மாக்கினாய்
பொருந்துமாய மோமயக்க புண்டரீக மாயனே
நறுந்துளவ மணித்தரங்க ராமராம ராமனே 23

மாயவாமுன் பாரதப்போர் வந்துதோன்றும் நாளையில்
நேயமாய் அருச்சுனர்க்கு நின்றுதேரை யூர்ந்தவா
ஆயனே அனந்தமான ஆதிலக்ஷ்மி யெனும்
நாயகி மணாளனான ராமராம ராமனே 24

சாடிசெய் துரியோதனன் சபையிலே திரௌபதை
ஆடையன் றுரிந்தபோது ஆதிமூல மென்றிட
வாடிடாமல் மானம்காத்து வனையுமாறு சீலைகள்
நாடியொன்று லட்சமாக்கும் ராமராம ராமனே 25

கற்சிலை யெனச்சபித்த அகலிகைசா பத்தையும்
உச்சிதம தாகவன் றுகந்துசாபம் நீக்கினுய்
அச்சானகி தன்ணைமேவ ஆசைகொண்டு மிதிலையில்
நற்சிலை வளைத்துநின்ற ராமராம ராமனே 26

ஆவல்கொண்டு பாரிலே அலைந்துமே யலாதுநின்
சேவடிக்கா ளாய்வராத சென்மமென்ன சென்மமோ
பாவகாரி யென்றெண்ணுமல் பாதுகாத் தருள்புரி
நாவலர்க்குப் பாய்சுமந்த ராமராம ராமனே 27

ஏகவஸ்து வாகிநின்ற எங்கள் ரெங்க நாயகா
சாகரத்தி னிற்றுயின்ற சகஸ்த்ரநாம தேசிகா
மோகனு சவுந்தரா முராரிமோட்ச காரணு
காகவண்ண னுகிவந்த ராமராம ராமனே 28

சானகி மணுளனே தரணியையோ ரடியுமாய்
வானமோ டளாவிநின்ற வராகவ தாரனே
நமோநமோ நாராயணு முகுந்தநந்த கேசவா
ஞானதேசி கப்ரதாப ராமராம ராமனே 29

வேறு

செப்பியே உந்தி பூத்தோன் செங்கண்மால் பாதம் போற்றி
முப்பதும் படித்தோர் கேட்டோர் முற்றிலும் எழுதினோர்க்குத்
தப்பிலா வரங்கள் தந்து சந்ததி கிளைபெற் ரேங்க
இப்புவி தனிலே வாழ்ந்து இன்பமுற் றிருப்பர் தாமே 30

## ஸ்ரீமத் கம்ப ராமாயணம்

### ஸ்ரீ ராமாவதாரம்

விரிந்திடு தீ வினைசெய்த வெவ்வியதீ வினையாலு
மருங்கடையின் மறையறைந்த வறஞ்செய்த வறத்தாலு
மிருங்கடகக் கரதலத்திவ் வெழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க் கவுசலையென் பாள்பயந்தாள்.

### தாலாட்டு

கொங்குமலி கருங்குழலாள் கௌசலைதன் குலமதலாய்!
தங்குபெரும் புகழ்ச்சனகன் திருமருகா! தாசரதீ!
கங்கையிலும் தீர்த்தமலி கணபுரத்தென் கருமணியே!
எங்கள்குலத் தின்னமுதே! இராகவனே! தாலேலோ!

## அகல்யா சாப விமோசனம்

இவ்வண்ண நிகழ்ந்த வண்ண மினியிந்த வுலகுக் கெல்லா
முய்வண்ண மன்றி மற்றோர் துயர்வண்ண முறுவ துண்டோ
மைவண்ணத் தரக்கி போரில் மழைவண்ணத் தண்ணலேயுன்
கைவண்ண மங்கு கண்டேன் கால்வண்ண மிங்கு கண்டேன்.

## சீதா கலியாணம்

கோமகன் முன்சன கன்குளிர் நன்னீர்
பூமக ளும்பொரு ளும்மென நீயென்
மாமக டன்னொடு மன்னுதி யென்னாத்
தாமரை யன்ன தடக்கையி னீந்தான்.

## பாதுகா பட்டாபிஷேகம்

அடித்ததல மிரண்டையு மழுத கண்ணினன்
முடித்தல மிவையென முறையிற் சூடினன்
படித்தலத் திறைஞ்சினன் பரதன் போயினன்
பொடித்தல மிலங்குறு பொலன்கொண் மேனியான்,

## கணையாழி

வாராதொழி யானெனும் வண்மையினா
லோராயிர கோடியி டர்க்குடையேன்
தீராவொரு நாள்வலி சேவகனே
நாராயண னேதனி நாயகனே.

இழந்தமணி புற்றர வெதிர்ந்ததென லானாள்
பழந்தன மிழந்தன படைத்தவரை யொத்தாள்
குழந்தையை யுயிர்த்தமல டிக்குவமை கொண்டா
ளுழந்துவிழி பெற்றதோ வியிர்ப்பொறையு மொத்தாள்.

## சூளாமணி

சூடை யின்மணி கண்மணி யொப்பது தொன்னா
ளாடை யின்கணி ரூந்தது பேரடை யாளம்
நாடி வந்தென தின்னுயிர் நல்கிய நம்பா
கோடி யென்று கொடுத்தனள் மெய்ப்புகழ் கொண்டாள்.

## கண்டேன் தேவி

கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களாற்
றெண்டிரை யலைகட லிலங்கைத் தொன்னக
ரண்டர்நா யகவினித் துறத்தி யையமும்
பண்டுள துயருமென் றனுமன் பன்னுவான்.

வைத்தபின் றுகிலின் வைத்த மாமணிக் கரசை வாங்கிக்
கைத்தலத் தினிதி னீந்தா டாமரைக் கண்க ளார
வித்தக காண்டி யென்று கொடுத்தனன் வேத நன்னூ
லுய்த்துள கால மெல்லாம் புகழொடு மோங்க நிற்பான்.

## விபீஷண சரணுகதி

ஆழியா னவனை நோக்கி யருள்சுரந் துவகை தூண்ட
ஏழினோ டேழாய் நின்ற வுலகும்என் பெயரும் எந்நாள்
வாழுநா ளன்று காறும் வாளெயிற் றரக்கர் வைகும்
தாழ்கட லிலங்கைச் செல்வ நின்னதே தந்தே னென்ருன்.

குகனோடு மைவ ரானோ முன்புபின் குன்று சூழ்வான்
மகனோடு மறுவ ரானோ மெம்முழை யன்பின் வந்த
அகனமர் காத லைய நின்னோடு மெழுவ ரானோம்
புகலருங் கானந் தந்து புதல்வராற் பொலிந்தா னுந்தை.

## வருணனை வழிவேண்டல்

தருண மங்கையை மீட்பதோர் நெறிதரு கென்னும்
பொருள்ந யந்துநன் னூனெறி யடுக்கிய புல்லிற்
கருணை யங்கடல் துயின்றனன் கருங்கட னோக்கி
வருண மந்திர மெண்ணினன் விதிமுறை வணங்கி.

## அங்கதன் தூது

கூவியின் றென்னை நீபோய்த் தன்குல முழுதுங் கொல்லும்
பாவியை யண்மி யஞ்சி யரண்புக்குப் பதுங்கினானைத்
தேவியை விடுக வன்றேற் செருக்களத் தெதிர்ந்து தன்னி
னுவியை விடுக வென்று னருளினம் விடுகி லாதான்.

## முதற்போர்

ஆனை யாவுனக் கமைந்தன மாருத மறைந்த
பூனை யாயின கண்டனை யின்றுபோய்ப் போர்க்கு
நானை வாவென நல்கினன் நாகிளங் கமுகின்
வானை தாவுறு கோசல நாடுடை வள்ளல்,

## கும்பகர்ணனை எழுப்புதல்

உறங்குகின்ற கும்பகன்ன ! உங்கண் மாய வாழ்வெலாம்
இறங்குகின்ற தின்றுகா ணெழுந்திரா யெழுந்திராய்
கறங்குபோல விற்பிடித்த காலதூதர் கையிலே
உறங்குவா யுறங்குவா யினிக்கிடந் துறங்குவாய்.

## பிரம்மாத்திரத்தினால் விழுந்த இலக்குவனைக் கண்டு இராமன் புலம்பல்

தாயோ நீயே தந்தையு நீயே தவநீயே
சேயோ நீயே தம்பியு நீயே திருநீயே
போயோ நின்று யென்னை யிகழ்ந்தாய் புகழ்பாராய்
நீயோ யானோ வுன்னினும் நெஞ்சம் வலியேனால்.

## பிராட்டி களங்கண்டு புலம்புதல்

எண்ணுமய லோடுமி ருந்ததுநின்
புண்ணுகிய மேனிபொ ருந்திடவோ
மண்ணேருயி ரேதமி யேன்வலியே
கண்ணேயமிழ் தேகரு ணுகரனே.
மேவிக்கனன் முன்மிதி லைப்பதியென்
பாவிக்கைபி டித்தது பண்ணவநின்
ஆவிக்கொரு கோள்வர வோவலர்வாழ்
தேவிக்கமு தேமறை யின்றெளிவே.
மேதாவினை யோய்விதி யார்வினைவாற்
போதாநெறி யெம்மொடு போதுறுநாள்
மூதானவர் முன்னர்மு டிந்திடெனும்
மாதாவுரை யின்வழி வந்தனையோ.

## அனுமன் சஞ்சீவி கொண்டு வருதல்

இங்குநின் றின்னன மருந்தென் றெண்ணினுற்
சிங்குமாற் காலமென் றுணர்ந்த சிந்தையான்
அங்கது வேரொடு மங்கை தாங்கினுன்
பொங்கிய விசும்பிடைக் கடிது போயினுன்.

## இந்திரஜித்து வதம்

மறைகளே தேறத் தக்க வேதியர் வணங்கற் பாலான்
இறையவ னிராம னென்னு நல்லற மூர்த்தி யென்னிற்
பிறையெயிற் றிவனைக் கோறி யென்றொரு பிறைவாய் வாளி
நிறையுறை வாங்கிவிட்டா னுலகெலா நிறுத்தி நின்றான்.

## இராவண வதம்

முக்கோடி வாணாளு முயன்றுடைய பெருந்தவமு
முதல்வன் முன்னாள்
எக்கோடி யவராலும் வெலப்படா யெனக்கொடுத்த
வரமு மேனைத்
திக்கோடு முலகனைத்துஞ் செருக்கடந்த புயவலியுந்
தின்று மார்பிற்
புக்கோடி யுயிர்பருகிப் புறம்போயிற் றிராகவன் றன்
புனித வாளி.

## ஸ்ரீராம பட்டாபிஷேகம்

மாணிக்கப் பலகை தைத்து வயிரத்தின் கால்கள் சேர்த்தி
ஆணிப்பொன் சுற்றி முற்றி யழகுறச் சமைத்த பீடம்
ஏணுற்ற பளிக்கு மாடத் திட்டன ரதனின் மீது
சேணுற்ற திரடோள் மன்னன் திருவொடும் பொலிந்தான் மன்னோ

அரியணை யனுமன் றாங்க வங்கத னுடைவா ளேந்த
பரதன்வெண் குடைக விக்க விருவருங் கவரி வீச
விரைசெறி குழலியோங்க வெண்ணெயூர்ச் சடையன் றங்கள்
மரபுளோர் கொடுக்கவாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி.

## பலஸ்ருதி

இராவணன் றன்னை வீட்டி யிராமனாய் வந்து தோன்றி
தராதல முழுதுங் காத்துத் தம்பியுந் தானு மாகப்
பராபர மாகி நின்ற பண்பினைப் பகரு வார்கள்
நராபதி யாகிப் பின்னு நமனையும் வெல்லு வாரே.

## ஸ்ரீ ராமர் பதிகம்

சீர்மேவு மாழ்வார்கள்பன் னிருவர் புகழுடன் செப்பவும் ராம ஜெயமே, திருவடிக் கன்பராய்ச் செல்வமும் முத்தியுஞ் சித்திதரும் ராம ஜெயமே, கார்மேக வண்ணனே யென்ற திரௌபதையை முன் காத்திட்ட ராமஜெயமே, கரியாதி மூலமென் றோலமிட முதலையைக் கண்டித்த ராமஜெயமே, பார்மீதிலுன் பாததூள் பட்டெழுந்த கலி பரிவான ராமஜெயமே, பாங்கான வேடன் மராமரா வெனப் பதவி புரிந்திட்ட ராமஜெயமே, ஆர்தா னுரைக்கவரு வாருந்த ஞமத்தை யனுதினம் ராமஜெயமே, ஐயனே யெனையாளு மெய்யனே ஸ்ரீமதே ராமாநு ஜாயநமவே. 1

விஞ்சுகா ரணியவன ரிஷிகளுக் காதரவு மேவிடும் ராமஜெயமே, மேலான தசரதன் மைந்தனுய்ப் புவிதனில் விஎரந்திடும் ராமஜெயமே, செஞ்சொன்மொழி ஜனகரா சனவில் லொடித்துச் செயம்பெற்ற ராம ஜெயமே, சீதைக் கிரண்டு வரங் கொடுத்துமே யயோத்தியில் சீர் பெற்ற ராமஜெயமே, தஞ்சமென் றனுமான் றனக்குச் சிரஞ்சீவி தந் திட்ட ராமஜெயமே, தந்தைக் குரைத்தசொல் வழுவாது தாரணியில் தரித்தருளும் ராமஜெயமே, அஞ்சலென் றடியேனை யாதரித் துன்பாத மருள் செய்யும் ராம ஜெயமே, ஐ ய னே யெனையாளு மெய்யனே ஸ்ரீமதே ராமாநு ஜாயநமவே. 2

விண்ணொளிய தாகவே நந்தகோ பன்மனையில் விளையாடும் ராமஜெயமே, வில்விசைய னுக்குபக வற்கீதை யோதியே வெற்றிதரும் ராமஜெயமே, கண்ணொளிய தாகவே யன்புடன் கோவுகளைக் காத்த தும் ராமஜெயமே, கஞ்சனை வதைத்துடல் கிழித்தெறிந் தனைவர்க்குங் காட்சிதரும் ராமஜெயமே, கன்றன சுரனைப் பாய்ந்து குடலைக் கிழித்து மறை கொண்டுவரும் ராமஜெயமே, கொற்றவன் தசரதன் பெற்றசீர் மைந்தனே கோவிந்த ராம ஜெயமே, அண்ணலே யுனதுதிரு வடி யார்கள் பங்கினி லமர்ந்தருளும் ராமஜெயமே, ஐயனே யெனையாளு மெய்யனே ஸ்ரீமதே ராமாநு ஜாயநமவே 3

உற்றமிதி லைப்பதியில் வில்லிரண் டாகவே யொடித்ததும் ராம ஜெயமே உம்பர்தொழு மங்கையை யுணர்ந்துதிரு மந்திர முவந்தரு ளும் ராமஜெயமே, கொற்றவர்கள் கண்டு தொழப் பரசுரா மன்கை வில் கொண்டதும் ராமஜெயமே, கோதண்ட வாள்கதா சங்குசக்ரா யுதா கோபால ராம ஜெயமே, மெத்தவரு மூலபல மத்தனையுமே கொன்று வெற்றிபெறும் ராமஜெயமே, மெலிவுற்ற சுக்ரீவ னுக்காக

வாலியை வீழ்வித்த ராமஜெயமே, அத்தனே யெனையாளுங் கத்தனே மெய்ஞ்ஞான மருள்புரியும் ராமஜெயமே, ஐயனே யெனையாளு மெய் யனே ஸ்ரீமதே ராமானு ஜாயநமவே. 4

ஜோதியே யென்றுமறை வேதியர்க ளோதவுஞ் சொல்லரிய ராமஜெயமே, சோம்புட னேவந்த விபீஷணன் குறைதீர்க்கத் தோன் றிடும் ராமஜெயமே, ஊதியே குழலினு லேகளத் தளவிலே யுகந்ததும் ராமஜெயமே, உயர்கருடன் மீதினில் இலட்சுமி சமேதனு யுலாவிவரும் ராமஜெயமே, நீதியே வழுவாமல் அஷ்டாட் சரப்பொருளில் நின்றதும் ராமஜெயமே, நித்தனுய் அத்தனுய் சுத்தனுய் வைகுந்த நிலைகொண்ட ராமஜெயமே, ஆதியே நின்னும மோதுவார்க் கெந்நாளு மருள்புரியும் ராமஜெயமே, ஐயனே யெனையாளு மெய்யனே ஸ்ரீ ம தே ராமானு ஜாயநமவே. 5

மண்டலம் புகழவே வசுதேவன் மைந்தனுய் வந்தருளும் ராம ஜெயமே, மாயாவ தாரமாய் கோபஸ்திரி மாரெலாம் மயல்பூண்ட ராமஜெயமே, விண்டலம் புகழ்திருப் பதிகள் நூற்றெட்டினும் விளங்கி னதும் ராமஜெயமே, வேதவே தாந்தபரி பூரண தயாபர மெய்ஞ்ஞான ராமஜெயமே, கொண்டல்மணி வண்ணனுய்ப் பாற்கடலிலே பள்ளி கொண்டதும் ராமஜெயமே, கோடானு கோடிபேர் பல்லாண்டு கூறியே கொண்டாடும் ராமஜெயமே, அண்டர் தினமே தொழும் புண்டரிக பாதனே அரும்பொருளும் ராமஜெயமே, ஐயனே யெனை யாளு மெய்யனே ஸ்ரீ மதே ராமானு ஜாயநமவே. 6

முப்பத்து முக்கோடி தேவர்கள் முனிவர்கள் மொழிகின்ற ராம ஜெயமே, மூவரும் ராமஜெய மேயென் றுரைக்கவே முத்திதரும் ராம ஜெயமே, செப்புமந் திரமெலாம் ராமஜெயமே மார்பில் திருவளரும் ராமஜெயமே, சீர்கொண்ட ராமஜெய மார்கொண்டு பணிகுவார் சித்ரவொளி ராமஜெயமே, ஒப்பரிய ராமஜெயம் மெய்ப்பொருளும் ராமஜெயம் ஓதரிய ராமஜெயமே, உச்சந்தரும் ராமஜெயம் பட்சந் தரும் ராமஜெயம் ஓங்கார ராமஜெயமே, அப்பனே ராமஜெய மென்று துதி செய்யவு மன்புதரும் ராமஜெயமே, ஐயனே யெனையாளும் மெய் யனே ஸ்ரீமதே ராமானு ஜாயநமவே. 7

சத்தியும் ராமஜெயம் முத்தியும் ராமஜெயம் சர்வமும் ராம ஜெயமே, சாத்திரம் ராமஜெயம் தோத்திரமும் ராமஜெயஞ் சதுர் வேதம் ராமஜெயமே, பத்தியும் ராமஜெயம் சித்தியும் ராமஜெயம் பதவியும் ராமஜெயமே, பத்தர் தொழும் ராமஜெயம் சித்தர்தொழும்

ராமஜெயம் பலவிதமும் ராமஜெயமே, வெற்றியும் ராமஜெயம் புத்தியும் ராமஜெயம் மெய்ப்பொருளும் ராமஜெயமே, வேள்வியும் ராமஜெயம் ஆவியும் ராமஜெயம் மேல்வீடும் ராமஜெயமே, அத்திமேல் பவனிவரும் நித்தியகல் யாணனே ஆனந்த ராமஜெயமே, ஐயனே எனையாளும் மெய்யனே ஸ்ரீமதே ராமாநு ஜாயநமவே. 8

பாடவறி யேன்ராம ஜெயமென்று நின்புகழ் பகரவறியேன் ராமஜெயமே,பத்தியாய் ராமஜெய மென்றுனது பாதமலர் பணியவறியேன் ராமஜெயமே, தேடவறி யேனின்னை ராமஜெய மேயென்று செப்பவறியேன் ராமஜெயமே, தேவர்க்கும் முனிவர்க்கும் யாவர்க்கு மரிதான தேனமிர்த ராமஜெயமே, நாடவறி யேனின்னை ராமஜெய மேயென்று நவிலவறியேன் ராமஜெயமே, நாயே னுனக்கடிமை யானே னெனக்கு கதி நல்குவாய் ராமஜெயமே. ஆடவர முண்டபல கோடிபே ருண்ட பொரு ளானந்த ராமஜெயமே, ஐயனே யெனையாளும் மெய்யனே ஸ்ரீமதே ராமாநு ஜாயநமவே. 9

விரிவான யகண்டபரி பூரணமு மாயெங்கும் விளையாடுகின்ற ஜோதி, விண்ணவர்க் கமுதளித் தண்ணலே உன்புகழ் விளம்புதற் கரிதுகண்டாய், தெரியாமல் நாயே னிடர்க்கடலி லேமூழ்கி சிந்தை மிக நொந்துருகினேன், தேவாதி தேவனே வைகுந்த வாசனே செந்தாமரைக் கண்ணனே. பரிவான வுனதுதிரு வடியே னெனக்குகதி பரம புருஷா வுனக்குப், பாரமோ துயர்களைய நேரமோ இவ்வேளை பட்சம் வைத் தடியன்மீதில் அரியே நமோவேத நாராயண கிருபை அருள் புரியும் ராமஜெயமே, ஐயனே யெளையாளும் மெய்யனே ஸ்ரீமதே ராமாநு ஜாயநம வே 10

சீர்கொண்ட ராமஜெய மென்றுதிரு மந்திரஞ் ஜபிக்கவரி யாமனுயேன், செப்பினேன் ராமஜெய மப்பனே நூற்றெட்டுத் திருநாம ராமஜெயமே, நீர்கொண்ட பாதமிசை மலர்கொண்டு சாற்றியே நித்தமு மிராமஜெயமே, நெஞ்சினில் ராமஜெயம் மந்திரமு வந்தருளும் நீங்காமல் ராமஜெயமே, கார்கொண்ட திருமேனி ராமஜெய மேயென்னைக் காத்தருளும் ராமஜெயமே, காதலால் ராமஜெயமே யென்று நம்பினேன் கர்த்தனே ராமஜெயமே, ஆர்கண்டு மறியாத மூலமந் திரமான ஆதியே ராமஜெயமே, ஐயனே யெனையாளு மெய்யனே ஸ்ரீமதே ராமாநு ஜாயநமவே. 11

சிவபெருமான் சந்நிதானத்தில் திருநந்திதேவர்
விண்ணப்பஞ் செய்தருளிய

## பதினாறு பேறு

மறைக ணிந்தனை சைவநிந் தனைபொரு மனமும் [1]
தறுக ணைம்புலன் களுக்கேவல் செய்யுறாச் சதுரும் [2]
பிறவி தீதெனாப் பேதையர் தம்மொடு பிணக்கும் [3]
உறுதி நல்லறஞ் செய்பவர் தங்களோ டுறவும் [4] 1

யாது நல்லன்பர் கேட்கினு முதவுறு மியல்பும் [5]
மாத வத்தினோ ரொறுப்பினும் வணங்கிடு மகிழ்வும் [6]
ஓது நல்லுப தேசமெய் யுறுதியு [7] மன்பர்
தீது செய்யினுஞ் சிவச்செய லெனக்கொளுந் தெளிவும் [8] 2

மனமும் வாக்குநின் னன்பர்பா லொருப்படு செயலும் [9]
கனவி லும்உன தன்பருக் கடிமையாங் கருத்தும் [10]
நினைவில் வேறொரு கடவுளை வழிபடா நிலையும் [11]
புனித நின்புகழ் நாடொறு முரைத்திடும் பொலிவும் [12] 3

தீமை யாம்புறச் சமயங்க ளொழித்திடுத் திறனும் [13]
வாய்மை யாகவே பிறர்பொருள் விழைவுறா வளனும் [14]
ஏமு றும்பர தாரநச் சிடாதநன் னோன்பும் [15]
தூய்மை நெஞ்சின்யா னெனதெனுஞ் செருக்குறாத் துறவும் [16]

துறக்கமீ துறையினு நரகிற் றோய்கினும்
இறக்கினும் பிறக்கினு மின்பந் துய்க்கினும்
பிறைக்கொழுந் தணிசடைப் பெரும விவ்வரம்
மறுத்திடா தெனக்குநீ வழங்கல் வேண்டுமால். 5

துதிவாணி[1] வீரம்[2] விசயம்[3] சந்தானம்[4] துணிவு[5] தனம்[6]
மதி[7] தா னியம்[8] சவு பாக்கியம்[9] போகம்[10] அறி[11] வழகு[12]
புதிதாம் பெருமை[13] யறம்[14] குல[15] நோயகல் பூண்வயது[16]
பதினாறு பேறுந் தருவாய் மதுரைப் பராபரனே. 6

— திருவையாற்றுப் புராணம்.

## மங்கள ஹாரதி

ஜெய ஜெய ஹாரதி
விக்ன விநாயக
விக்ன விநாயக
ஸ்ரீ கணேசா

ஜெய ஜெய ஹாரதி
சுப்ரமண்யா
சுப்ரமண்யா
கார்த்திகேயா

ஜெய ஜெய ஹாரதி
வேணுகோபாலா
பாபவிதுரா
வேணுகோபாலா
வேணுலோலா
நவனிதசோரா

ஜெய ஜெய ஹாரதி
வெங்கடரமணு
சீதாராமா
வெங்கடரமணு
சங்கடஹரணு
ராதே ஸ்யாம

ஜெய ஜெய ஹாரதி
கௌரிமனோகர
சாம்பசதாசிவ
கௌரிமனோகர
பவானி சங்கர
உமாமகேஸ்வா

ஜெய ஜெய ஹாரதி
ராஜராஜேஸ்வரி
மகாலக்ஷ்மி
மகாசக்தி
ராஜராஜேஸ்வரி
திரிபுரசுந்தரி
மகாசரஸ்வதி
மகாகாளி

ஜெய ஜெய ஹாரதி
தத்தாத்ரேய
தத்தாத்ரேய
த்ரிமூர்த்யவதாரா

ஜெய ஜெய ஹாரதி
சத்குருநாத
சத்குருநாத
சிவானந்த

ஜெய ஜெய ஹாரதி
ஆஞ்சநேயா
ஆஞ்சநேய
அனுமந்தா

ஜெய ஜெய ஹாரதி வேணுகோபால

## மங்களம் ( கோரஸ் )

### பல்லவி

சர்வத்ர கோவிந்த நாம சங்கீர்த்தனம்
ராமநாம சோபனமே (சர்வத்ர)

அனுபல்லவி

நன்மையுஞ் செல்வமும் நாளும் நலமும்நமக்
கென்றுமே நல்கிடுவான்
தின்மையும் பாவமுந் தேய நமக்குத்
தெய்வீகந் தன்னை யளித்திடுவான் (சர்வத்ர)

மண்ணுலகி லிந்த மாபெரும் தேசத்தில்
மானுடச் சட்டையில் வந்தான் — அவன்
விண்ணுலகர் கூட வியந்து புகழவே
வெற்றி யருள்புரி இராமகதை (சர்வத்ர)

— ஸ்ரீ ராமநாமப் பரதேசி.

## இராமன் வந்தான்!

கம்புவைத் தரித்தகையில் கார்முகம் தரித்தான் வந்தான்!
அம்புயக் கண்ணன் வந்தான்! அன்பருக்கன்பன் வந்தான்!
தம்பியர்க்கினியான் வந்தான்! தசரத ராமன் வந்தான்!
உம்பருக்கு அமிழ்தம் முன்னாள் உதவிய ஒருவன் வந்தான்!

மனுகுலம் விளங்கத் தோன்றி வரிசிலை யிளையனோடும்
முனியோடு போனான் வந்தான்! மும்புர மெரித்த வில்லி
தனுவினையிறுத்துச் சீதை தனைக் கரம்பிடித்தான் வந்தான்!
அனையவளுடனே மீண்டும் அயோத்தியில் அடைந்தான் வந்தான்!

தாயுரை தலைமேற் கொண்டு தையலையுடனே கொண்டு
தீய வெங்கானம் சேர்ந்த செருவலிவில்லி வந்தான்!
தூயமா முனிவன் முன்பு தோன்றிய தூயோன் வந்தான்!
மாய மாரீசன் மாள வரிசிலை வளைத்தோன் வந்தான்!

அனுமனை அடிமை கொண்டாங்கு ஆயிரங்கதிரோன் மைந்தற்கு
இனியனாய் வாலிமாள எரிசரம் துரந்தான் வந்தான்
நினைவதன் முன்னம் ஆழிநீரெலாம் நெருப்பதாகக்
குனிசிலை வளைத்தான் வந்தான்! கோசலை நாடன் வந்தான்!

குன்றினுல் ஆழிகட்டிக் கொடுந்திறற் சேனையோடு
சென்றிராக்கதரை எல்லாம் செருக்களத்த விய நூறித்
தன்றிறல் அழிந்துநின்ற தசமுகன் வலிமைகண்டு அங்கு
இன்றுபோய் நாளை வாவென்று இயம்பிய இறைவன் வந்தான்

முன்னம் நாஞ் சொன்னநாளின் முடுகிநாம் சொல்லோமாயின்
வன்னியின் பரதன் வீழும் என்றுதன் மனத்தில் எண்ணி
அன்னவன் எரி விழாமல் அனுமனை முன்னே ஏவிப்
பொன்னகரடைந்தான் வந்தான்! புவன மூன்றுடையான்
வந்தான்

—உத்தர காண்டம்

## மங்களம்

மங்களம் ஸ்ரீ ராமநாதனே
எங்கும் நிறைந்தவ (மங்)

சங்கு சக்கரமுடைய தேவ சங்கடமடைந்து
எங்களைக் காப்பாய் என வந்த அமரரைக் காத்தவனே (மங்)

மச்ச ரூபனுக வந்து மாமறைகள் தமை
இச்சகத்தில் காத்து அருளிய எளியவர்கள் நாயகனே (மங்)

வராக ரூப ராம ராம ராமனுக வந்தாய்
அராவணைத்துயில் ஆனந்த மூர்த்தியே
அடியேங்களைக் காத்தருள்வாய் (மங்)

( பாடியவர் :- ராமநாமப் பரதேசி )

வாழி சானகி வாழி ராகவன்
வாழி நான்மறை வாழிய ரந்தணர்
வாழி நல்லற மென்றுற வாழ்த்திஞ
ஞூழி தோறும் புதிதுறும் சீர்த்தியான்

ஏழை சோபன மேந்திழை சோபனம்
வாழி சோபன மங்கள சோபனம்
ஆழி யான வரக்கனை யாரியச்
சூழி யானை துகைத்தது சோபனம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

ஜெய ஜானகி ஜீவன ஸ்மரணம்-ஜெய ஜெய ராம்
ஜெய கோவிந்த நாமசங்கீர்த்தனம்-கோவிந்தா கோவிந்தா
நம: பார்வதி பதயே! ஹரஹர மகாதேவ
ஜெய சத்குரு ஸ்வாமிக்கி-ஜே
சமஸ்த பாகவதுலகு-ஜே
ஜெய ஆஞ்சநேய மகாராஜ்கி-ஜே

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக!



மதராஸ் ரிப்பன் பிரஸ், புதுக்கோட்டை—1233

( கஷ்ட நிவாரண மந்திரம் )

அடியார் அடியேன் எனும் ஆர்வமலால்
ஒடியா வலியேன் உடையேன் உளனே
கொடியாய் குறியாய் குணமேதும் இலாய்
நெடியாய் அடியேன் நிலைநேர் குதியோ.

( சர்வ ரோக சஞ்சீவி )

நாடிநான் தருவன்என்ற நல்லறி வாளன்நாளும்
தேடிநான் முகனும்காணுச் செய்யவன் சிரித்தலோடும்
ஆடினன் அழுதான்பாடி அரற்றினன் சிரத்தில்செங்கை
சூடினன் தொழுதான்ஓடி உலகெலாம் துகைத்தான்துள்ளி,

---

குறிப்பு: இப் புத்தகத்தில் வரும் இராமர் தோத்திரத்தைப் பாடம் செய்து ஒப்பிக்கும் 12 வயதுக்குட்பட்ட சிறுவர்களுக்குப் பரிசளிக்கப்படும்.

---

## இனி வரும் நூல்கள்

ஸ்ரீ ராமகதா சாகரம் :- பால காண்டம் (வெளிவந்துள்ளது)

அச்சில் :-
1. அயோத்யா காண்டம்
2. ஆரண்யா காண்டம்
3. கிஷ்கிந்தா காண்டம்
4. சுந்தர காண்டம்
5. யுத்த காண்டம் (முதற் பாகம்)
6. யுத்த காண்டம் (இரண்டாம் பாகம்)
7. முருகன் திருவருள்
8. பதினறு பேறு.

விவரங்களுக்கு:—

**V. தியாகராஜன்**

**7063, திருச்சி ரோடு, திருக்கோகர்ணம்,**

**புதுக்கோட்டை.**

TEL: "RAMAKATHA"

# List of Stations where Srimath Kamba Ramayana Lectures were delivered.

1 ADIRAMPATNAM
2 AYYAMPET
3 ATHUR-MADURA
4 ATHUR-SALEM
5 ARUVANGADU
6 AVINASHI
7 ARIMALAM
8 ALANGUDI
9 ARIYALUR
10 BANGALORE
11 COIMBATORE
12 CALCUTTA
13 CHIDAMBARAM
14 COONOOR
15 CUDDALORE
16 CHROMPET
17 C. N. PALAYAM
18 CHINNA SALEM
19 DINDIGUL
20 DEVAKOTTAI
21 ERODE
22 ETTAYAPURAM
23 ERNAKULAM
24 GOBICHETTIPALAYAM
25 HARUR
26 HIRAKUD
27 JAMSHEDPUR 1 & 2
28 JAMALPUR
29 KOOHALUR
30 KHARAGPUR
31 KANADUKATHAN
32 KEERANUR
33 KARAIKUDI
34 KOZHIKODE
35 KUMBAKONAM
36 KANDANOOR
37 MADURA
38 METTUPALAYAM
39 MADUKKUR
40 MANNARGUDI
41 MOYAR
42 MASINAGUDI
43 MAHADHANAPURAM
44 MILATUR
45 METTUR DAM R.S.
46 MEVANI
47 MELKUMARAMANGALAM
48 MADRAS-17
49 NEGAPATNAM
50 NEW DELHI
51 OOTACAMUND
52 ONBATHUVELI
53 PUDUKKOTTAI
54 POONAMALLEE
55 PALAYAMKOTTAI
56 PAPANASAM
57 PUDUCHATRAM
58 PUDUVAYAL
59 RENGANATHAPURAM
60 RISHIKESH
61 RASIPURAM
62 ROBERTSONPET K.G.F.
63 SATYAMANGALAM
64 SALEM
65 SRIRANGAM
66 SIVAKASI
67 TRICHY
68 TIRUPUR
69 TIRUGOKARNAM
70 TIRUMAYAM
71 TIRUKKATTUPALLI
72 TUTICORIN
73 TINNEVELLY
74 TIRUVADI
75 TIRUVIDAIMARUTHUR
76 TELCO
77 VADUVUR
78 VISHAGAPATAM
79 VIRUDUNAGAR
80 VADAKADU
81 WELLINGTON

---

*For all particulars please write to :-*

V. THYAGARAJAN
7063, Trichy Road, Tirugokarnam
PUDUKKOTTAI (S. India)
"Tel. RAMAKATHA"